Registered No. M. 2990 Vol. 35—No. 9



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | சுபகிருது புரட்டாசி 1962 செப்டம்பர் | இதழ் 9

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர்: அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ.,

உதவிப் பத்திராசிரியர்: மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை–4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

# செய்திச் சுருக்கங்கள்

ஆண்டு விழா: திரிசிரபுரச் சைவசித்தாந்த சபையின் 77 ஆம் ஆண்டு நிறைவுவிழா, 12--8--62 அன்று திரு. T M. நாராயணசாமி பிள்ளை M. A., B. L அவர்கள் தலைமையில் கொண்டாடப் பெற்றது. அதுபொழுது "திருக்குறள்வேள்" திரு. G. வரதராஜனர் B. A. அவர்கள் விழாவைத் தொடங்கி வைக்க 'மதுரகவி' 'முதுபெரும் புலவர்' திரு முத்து. சு. மாணிக்கவாசக அடிகளார், திருமுருக கிருபானந்த வாரியார். தமிழ் நாவலர் திரு. சி. அரசப்பனர் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். செயலாளர் திரு. சிவப்பிரகாசம் அவர்கள் நன்றி கூறினர்.

**மறைஞான சம்பந்தர் திருநாள்;** நமது சமாஜச் சார்பில் 1—9 62 அன்று தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில், வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் கொண்டாடப் பெற்றது. சமாஜச் செயலாளர் திரு. ச சிவகுமார், M.A. அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர்கள். புலவர் ந. ரா. முருகவேள் "மறைஞான சம்பந்தர் மாட்சி" பற்றிச் சொற்பொழிவு ஆற்றினர்கள். இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், B. A. அவர்கள் நன்றியுரை நவின்றார்கள். சங்கீத பூஷணம் திரு. சுவாமிநாதன் அவர்கள் திருமுறை இசை மிழற்றினர்கள்.

Reg. M. 2330 உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

| மலர் 35 | சுபகிருது புரட்டாசி 1962 செப்டம்பர் | இதழ் 9 |
|---|---|---|

# *காசி விசுவநாதர்

———:x:———

(முருகவேள்)

முன்னுரை :

இந்நாளில் நாம் இந்தியநாட்டின் ஒருமைப்பாடு (National Integration) குறித்துப் பெரிதும் முயன்று வருகின்றோம். அதற்குரிய வழிவகைகளைப் பற்றிப் பெருந் தலைவர்கள் பலரும் ஆராய்ந்து வருகின்றனர். இதனை நம் முன்னோர்கள் சமயத்துறையில் தொன்னெடுங்காலமாகவே வற்புறுத்திக் கடைப்பிடித்து வந்துள்ளனர். நாட்டின் ஒரு பகுதியிலுள்ள மக்கள் பிற பகுதிகளுக்கும் சென்று அங் கங்குள்ள மக்களோடு அன்புடன் கலந்து பழகி, ஒற்று மையை வளர்த்துக்கொண்டு இன்புற்று வாழ்தற்பொருட்டு, நம்முடைய பெரியவர்கள் பல ஏற்பாடுகளைச் சிறப்புற வகுத்திருந்தனர்.

தென்னாட்டு மக்கள் வடக்கேயுள்ள காசி முதலிய தலங் களுக்கும், வடநாட்டிலுள்ள மக்கள் இராமேச்சுரம் முதலிய

* சென்னை 'ஐயனார்புரம்' காசி விசுவநாதர் கோயி லின்கண் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர் களின் தலைமையில், மாதாந்தர வழிபாட்டின்போது பேசிய தனைத் தழுவியது. (26—8—62)

தலங்களுக்கும் யாத்திரை செய்தலை, ஒரு சிறந்த சமயக் கடமையாகவும் புண்ணியச் செயலாகவும் நம் சமய நூல்கள் வற்புறுத்துகின்றன. இதனால் எத்துணையோ பலவகை நெருக்கடிகளிலும்கூட, இந்திய ஒருமைப்பாடு சிறிதும் குன்றாமல் நின்று நிலைபெற்று இன்றளவும் வளர்ந்துகொண்டு வருகின்றது. காசி விசுவநாதர் காசியில் மட்டுமே யன்றித் தமிழ்நாட்டிற் பெரும்பாலான கோயில்களில் எழுந்தருளி விளங்குகின்றார். அங்ஙனமே காசிப்பதியிலேயே இராமேச் சுரம் முதலிய தலங்கள் அமைந்திருக்கும் செய்தியை அதிவீரராம பாண்டியர் இயற்றியருளிய காசிகாண்டம் என்னும் நூலினால் அறிகின்றோம். காசி விசுவநாதர்க்கு இரண்டு தனிக் கோவில்கள் நம் சென்னையிலும் அமைந்துள் ளன. இந்தத் திருக்கோயில் குசராத்தியைச் சேர்ந்த பெரு மக்கள் சிலரின் பொறுப்பில், இத்துணைச்சிறப்புற நன்கினிது விளங்கி வருவது, நம்மனோர் பெரிதும் மகிழ்ந்து பாராட்டு தற்குரியது ஆகும்.

## காசி எனும் பெயர்க் காரணம் :

நாம் காசி என்னும் சொல்லைப் பலகாற் கேட்டிருக் கின்றோம். அதன் பொருள் இன்னது என்பதனை நம்மிற் பெரும்பாலோர் அறியோம். கா—தேஜஸ், தேசு, ஒளி. சி—ஸ்ரீ, திருமகள். முத்தித் திருமகள் மிகவும் ஒளியோடு பொலிந்து வாழ்ந்துகொண்டிருத்தலால், ‘காசி’ என்னும் பெயர்பெற்றது என்பர்.

> “தேசொடும் பொலிந்து முத்தித் திருமகள் உறைதல் தன்னால்
> காசி என்று உரைப்பர்”

எனவரும் காசிகாண்டச் செய்யுள் இதனை யுணர்த்தும்.

முத்தி தரும் தலங்கள் ஏழு என்பர். அவைகள் காசி, காஞ்சி, அவந்தி, மாயை, அயோத்தி, துவாரகை, மதுரை எனப்படும். அவற்றுள் மிகவும் தலைசிறந்தது காசியேயாகும். காசியை அடைவதற்கு ஏதுவாக வுதவுங் காரணம் பற்றியே, பிற தலங்களும் முத்தி வழங்கும் சிறப்

யுடையன என்று குறிப்பிடப்பெற்றன. 'காசித்' தலத்தின் அருமை பெருமைகள் கணிப்பரியன.

> ''காசி மாயாபுரி அவந்தி காஞ்சிமற்று
> ஓசைகொள் அயோத்தி வண்துவரை ஒப்பறும்
> ஏசிலா மதுரை என்றிசைக்கும் ஏழ்பதி
> மாசறு முத்தியை வழங்கும் என்பவே''

''காசியைக் குறித்துச் செல்லும் கால்களே கால்கள் ஆகும்!
காசியை வழுத்தும் நாவே நாவெனக் கழற லாமால்!
காசியின் கதைகள் கேட்கும் செவிகளே செவிகள் ஆகும்!
காசியை இனிது காணும் கண்களே கண்கள் ஆமால்!''

## தமிழ் நூல்களில் வாரணாசி:

காசிக்கு வாரணாசி என்றும் ஒரு பெயர் உண்டு. இப் பெயரே (Benares) என ஆங்கிலத்தில் திரிந்து வழங்கு கின்றது. வாரணாசி என்னும் பெயர் மிகப் பழங்காலத்தி லேயே தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. சங்க நூல்களுள், கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையின் கண்,

> ''தெருவின்கட்
> காரணம் இன்றிக் கலங்குவார்க் கண்டு
> வாரண வாசிப் பதம்பெயர்த்தல் ஏதில
> நீநின்மேற் கொள்வ தெவன்?''

என வருதல் காணலாம். இங்ஙனமே ஏறத்தாழ 1800 ஆண்டுகட்கு முற்பட்டன எனக் கருதப்படும் சிலப்பதி காரம், மணிமேகலை என்னும் நூல்களினுள்ளும் 'வார ணாசி' என்னும் பெயர் வழங்கப்பட்டுள்ளது. கண்ணகியை மாதரியினிடம் ஒப்படைக்கும் கவுந்தியடிகள், 'தவத் தோர் அடைக்கலம்தான் சிறிது ஆயினும் மிகப் பேரின்பம் தரும் அது கேளாய்' என விளக்கிக் கூறும் பகுதியில்,

> ''மத்திம நன்னாட்டு வாரணம் தன்னுள்
> உத்தர கவுத்தற்கு ஒருமகன் ஆகி
> உருவினும் திருவினும் உணர்வினும் தோன்றிப்
> பெருவிறற் றானம் பலவும் செய்தான்''

என்புழி, வாரணவாசி 'வாரணம்' எனக் குறிப்பிடப்பெறு கின்றது. மணிமேகலையில் 'ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை'யில்,

"வாரணாசியோர் மறைஒம் பாளன்
ஆரண உவாத்தி அபஞ்சிகன் என்போன்..."
"வாரணாசியோர் மாமறை முதல்வன்
ஆரண உவாத்தி அரும்பெறல் மனைவியாள்..."

எனவரும் பகுதிகளால், மிகப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ்நாட்டு மக்கள் வாரணாசியைப் பற்றி அறிந்தும், அதனோடு தொடர்பு கொண்டும் இருந்தனர் என்னும் உண்மையினை உணரலாம்.

காசிமா நகரம் வரணை அசி என்னும் இரண்டு ஆறுகளுக்கு இடையில் அமைந்து விளங்கும் நகரம் ஆதலின், 'வாரணாசி' என்னும் காரணப் பெயர்பெற்றது. அடைந்தவர்களின் பாவம் நீங்கத் தடுப்பது வரணை. தன்னைச் சார்ந்து நீராடியவர்களின் பாவங்களை அறுப்பது அசி. பெரும்பாலும் ஆறுகள் கிழக்கு நோக்கியே ஓடும் இயல்பின. சிறுபான்மை மேற்கு நோக்கியும் ஓடும். ஆயினும் தெற்கில் இருந்து வடக்கு நோக்கி ஓடும் ஆறுகள் மிகவும் சிறப்புடையன. வரணையும் அசியும் ஆகிய ஆறுகள் தெற்கில் இருந்து வடக்கு நோக்கி ஓடுதலின், மிகவும் சிறப்பாகப் போற்றத்தக்கன.

"சார்ந்தவர் பாவம் நீங்கத் தகைதலான் வரணை என்றும்
ஆர்ந்தநீர் படிந்தோர் பாவம் அறுத்தலால் அசி என்றும்
சேர்ந்தன நாமம், தெற்கு வடக்கதாய் உண்மை தேர்ந்தோர்
ஓர்ந்திடும் முத்தி வைப்பின் காவலாய் ஒழுகும் அன்றே"
"ஆதலின் தீமை யோர்கட்கு அடையொணாது அசியினோடு
மேதகு வரணையாறும் விழைதக ஒழுகு மாற்றால்
மாதவக் கிழமை பூண்ட முனிவர் வளங்கொள் காசிக்கு
ஏதமில் நாமம் வாரணாசி என இசைத்த தாமால்"

சிவபெருமான் பிரிவின்றி இடைவிடாது எழுந்தருளி விளங்குதலின் இதற்கு அவிமுத்தம் (விடப்படாதது) என்றும்; சிவசாரூபம் பெற்ற உருத்திர கணங்கள் பெருந்திரளாக வசித்து வருதல் பற்றி உருத்திரவாசம் என்றும்; உலகங்களெல்லாம் அழிந்தொழியும் கடையூழிக் காலத்தும் அழியாது நிலைபெறுதலின் மகாமயானம் என்றும்; தன்னையுடைந்தவர்கள் முத்திப்பேறு எய்தி ஆனந்தமாகக் கானம்

செய்துகொண்டிருக்குமாறு செய்வித்தலின் 'ஆனந்த கானம்' என்றும் பலப்பல பெயர்கள் காசித் தலத்திற்கு வழங்கப்பெறும்.

## திருமுறைகளில் வாரணாசி :

காசி இத்துணைச் சிறந்த தலமாயினும், அது நம் சமய ஆசிரியப் பெருமக்களால் திருப்பதிகம் பாடப்பெறவில்லை. ஆயினும், 'க்ஷேத்திக் கோவை'த் திருப்பதிகங்களில் வைப்புத் தலங்களுள் ஒன்றாக அஃது இடம் பெற்றிருக்கின்றது.

" மாட்டூர் மடப்பாச்சில் ஆச்சிராமம்
முண்டீச்சரம் வாதவூர் வாரணாசி..." (சம்பந்தர்)

" மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர்
வக்கரை மந்தாரம் வாரணாசி..." (அப்பர்)

திருநாவுக்கரசர் பெருமான் "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டு அல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" எனத் திருக்கயிலை யாத்திரையை மேற்கொண்ட போது, திருக்காளத்தியை வணங்கினார். ஸ்ரீசைலம் இறைஞ்சினார். தெலுங்கு நாட்டைக் கடந்தார். கன்னட தேசம் எய்தினார். பின்னர் மாளவம் இலாடபூமி என்பன கடந்து, மத்திய பைதிரம் (Central Provinces) அடைந்து, வாரணாசியை வழிபட்டார். இதனை,

" அன்ன நாடு கடந்து கங்கை
அணைந்து சென்று வலங்கொளும்
மின்னு வேணியர் வாரணாசி
விருப்பி னோடு பணிந்தார்..." (353)

எனப் பெரியபுராணத்திற் சேக்கிழார் கூறுதல் கொண்டு தெளியலாம்.

## காசியின் மாட்சி :

இத்தகைய சிறந்த காசியின்கண் சென்று சிலகாலம் வாழ்ந்து இறக்கப்பெறும் பேறு பெற்றவர்களை உமையம்மையார் தமது உத்தரியம் கொண்டு வீசிக் களைப்பு நீக்க, இறை

வன் அவர்களின் செவியில் பிரணவ உபதேசம் செய்து, முத்திப்பேறு எய்தும்படி அருள்புரிவான் என நூல்கள் பலவும் கூறுகின்றன.

"இத்தலத் தெய்தி இறக்குநர் யாரும் இளைப்பாற
உத்தரியம் கொடு மாதுஉமை வீசிட, உமைஒருபால்
வைத்த அரும்பொருள், மேவரு தாரக மறைஓதி
முத்தி அளித்திடும் இப்பதிசீர்க்கொருமுடிவு உண்டோ?"

காசியம்பதி நமக்கு நெடுந்தொலைவில் எங்கேயோ இருக்கின்றது என்று எண்ணுதல் வேண்டா. "உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்" என நம் திருமூலர் கூறுதற்கு ஏற்ப, நமது உடம்பின்கண்ணும் காசித்தலம் அமைந்து விளங்குகின்றது. நம் உடம்பில் இடைகலை பிங்கலை என்னும் நாடிகள் இரண்டு உள்ளன. அவற்றிற்கு இடையே சுழுமுனை என்னும் நாடியும் முதுகந்தண்டின் வழியாக ஓடுகின்றது. இடைகலை பிங்கலை என்னும் இரண்டும் வாரணை அசி என்னும் ஆறுகளாக அமைய, அவற்றின் நடுவே சுழுமுனை நாடி கூடும் இடமே வாரணாசி என நூல்கள் பல வாறு கூறும்.

"இடைகலை பிங்கலை வாலை சிறந்துடன் இவைகூடும்
முடிவறு வாரணாசி நடுவுயர் சுழுமுனை என்று
விடையம் அறுத்துஉயர் மெய்த்தவம் மேவிய காபாலி
அடைவின் உரைத்தனன் இந்நகருக்கு இணையாதேயோ?"

எவ்வாறு காயத்திரிக்கு இணையான மந்திரமும், சிவபெருமானுக்கு மேற்பட்ட தெய்வமும் இல்லையோ, அவ்வாறே காசிக்கு மேற்பட்ட தலமும் இல்லை. 'நாங்கள் காசிக்குப் போகப்போகிறோம்' என்று சொல்லிக்கொண்டிருந்தாலே, ஓர் அசுவமேதயாகம் செய்த பலனுண்டு. அங்ஙனமாயின், அதற்குச் சென்று வழிபட்டவர்களின் பேறு சொல்லும் தகைமையதோ? காசிக்குச் சென்று விசுவநாதப் பெருமானை வணங்கி, அங்குள்ள முத்தி மண்டபத்தில் ஒரு நொடியளவு நேரமாயினும் தங்கியிருந்து தியானித்தவர்கள், சொல்ல இயலாத பெருமைசான்ற தூய வீடு பேற்றை அடைவார்கள்.

விசுவநாதர் :

காசிப்பதியில் எழுந்தருளி விளங்கும் பெருமானுக்கு விசுவநாதர் என்பது பெயர். விசுவம் என்றால் உலகம், அண்டம் என்பது பொருள். (Universe) என்னும் ஆங்கிலச் சொல் 'விசுவம்' என்னும் பொருளையே உணர்த்து கின்றது. இறைவன் உலகத்துக்கு அப்பாற்பட்டு மேலோங்கி நிற்பவன் (விசுவாதிகன்); இறைவன் உலகத்திற்கு நிமித்த காரணன், உலகங்களெல்லாம் அவன்பால் தோன்றி அவனிடமே ஒடுங்குகின்றன (விசுவகாரணன்); உலகத்தி லுள்ள உயிர்ப்பொருள் உயிரில்பொருள்கள் எல்லாவற்றுள் ளும் கலந்துநின்று, அவற்றை யெல்லாம் இயக்கிவருபவன் இறைவனே (விசுவாந்தரியாமி); உலகங்களையெல்லாம் தனக்குப் பருவடிவமாகக் கொண்டு விளங்குபவன் இறைவன் (விசுவரூபி). இதனை நமது அருள் நந்தி சிவாசாரி யார் தமது சிவஞான சித்தியாரின்கண்,

" உலகினை இறந்து நின்றது அரன்உரு என்பது ஓரார்
உலகவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார்
உலகினுக் குயிருமாகி உலகுமாய் நின்ற தோரார்
உலகினில் ஒருவன் என்பர் உருவினை உணரார் எல்லாம் "

என அருளிச் செய்திருத்தலும், கண்டு அறிந்தின்புறற் பாலது. விசுவாதிகன் விசுவகாரணன் விசுவாந்தரியாமி விசுவரூபி விசுவசேவியன் என்பன போன்ற இறைவனின் பலவகை இலக்கணங்களையும், விசுவநாதன் என்னும் ஒரு சொல்லே விளக்கிநிற்கவல்ல மேன்மை சான்றதாகும்.

மறைச்சிகரம் :

காசித் தலத்தின் கணிப்பரும் சிறப்புக்களையும், ஆங்கு எழுந்தருளியுள்ள விசுவநாதப் பெருமானின் அருமை பெருமைகளையும், சைவசித்தாந்தச் சான்றோர்களுள் ஒருவ ராகத் தலைசிறந்து திகழும் நமது குமரகுருபர அடிகளார், தாம் இயற்றி யருளியுள்ள காசிக் கலம்பகம் என்னும் சிறந்த நூலின்கண் அழகுற விளக்குகின்றார்.

காசியானது இந்தியாவிலேயே மிகவும் புகழ்பெற்ற நகரங்களுள் ஒன்றாக விளங்குவதோடன்றி, மறைகள் எல்லாவற்றாலும் போற்றப்படும் மாட்சிமை பெற்று, அவற்றின் சிகரமாகவும் திகழ்ந்து, ஒப்புயர்வற்று ஒளிர்கின்றது.

"நகர மாய், மறைச்
சிகரம் ஆனதால்!
மகரம் மாயினுன்
நிகரில் காசியே"

### பிரணவ உபதேசம்:

சிவபிரான் காசியில் இறந்தவர்களுக்குப் பிரணவ உபதேசம் செய்து ஞானம் அளித்து முத்தி நல்கும் சிறப்பினைக் குமரகுருபரர் நயமுறப் பாடுகின்றார். நீரில் எழுதப்படும் எழுத்தைப் போன்று நிலையில்லாத உடலைக் காசியில் துறந்து இறந்தவர்களுக்கு, 'நீ கூறுவது ஓரெழுத்துமட்டும் தானே? அவர்கள் எல்லாவற்றையும் எவ்வாறு உணர்ந்து கொள்கின்றனர்?' எனக் குமரகுருபரர் வியந்தும் நயந்தும் விசுவநாதரை வினவுகின்றார். ஓர்எழுத்து – பிரணவம்.

"நீர்எழுத்துக் கொத்தவுடல் நீத்தார்க்கு, நீநவில்வது
ஓர்எழுத்தே! முழுதும்அவர் எவ்வண்ணம் உணர்வதுவே?"

### சிவசாருபப் பேறு:

காசியில் சென்று இறப்பவர்கள் யாவரும் சிவசாரூபம் பெறுவர் என நூல்கள் கூறும். இதுபற்றியும் குமரகுருபரர் தம் காசிக்கலம்பகத்தில் சுவைபெருகக் குறிப்பிடுகின்றார். சிவசாரூபம் பெறுபவர்கள், சிவபெருமானைப் போன்றே திரிநேத்திரம் காளகண்டம் சதுர்ப்புஜம் மான் மழு முதலிய பல உருவ ஒப்புமைகளைப் பெறுவர். அதனால் சிவபெருமானுக்கும் சிவசாரூபம் பெற்றவர்களுக்கும் இடையே வேறுபாடு தெரியாமல் அடியார்கள் இடர்ப்படுவர். அங்ஙனம் நேராமற்பொருட்டு, அம்பிகை சிவபெருமானின் மார்பில் தன் முலைத் தழும்புகளைப் பொறித்து வைத்து வேறுபாடு செய்தருளினள். அங்ஙனம் அம்பிகை செய்யாமற்போயிருப்பின், நாம் சிவபெருமானைக் காசியில்

எவ்வாறு வேறுபிரித்து இறைஞ்சுதல் இயலும்? என்கின்றார் குமரகுருபரர்.

"உடையாள் அகிலேசர்க்கு ஓங்குமுலைக் கோட்டின்
அடையாளம் இட்டுவையாள் ஆனால்,—கடையில் அவர்
செவ்வண்ணம் பெற்றார் திரளொடுநிற் கின்றாரை
எவ்வண்ணம் கண்டிறைஞ்சு வேம்?"

காசியில் இறப்போர் சிவசாரூபம் பெறுவர் என்பதனை இப்பாடல் நயமுற உணர்த்துகின்றது.

## முயலாமலே முத்திநலம் :

முத்தியடைவது என்பது எளிதான செயல் அன்று. அதற்காக நாம் பெரிதும் பாடுபட்டேயாதல்வேண்டும். Heaven என்னும் ஆங்கிலச் சொல் 'அரும்பாடுபட்டு அடையத்தக்கது' (That which can be attained only by much heaving) என்னும் பொருளுடையது என்பர். "செய்தற் கரிய செயல்பலவும் செய்து சிலர் எய்தற்கரிய தனை எய்துகின்றார்" என்று திருக்களிற்றுப்படியார் கூறுதலும் காணலாம். இத்தகைய அரிய முத்திப்பேற்றினை, நாம் காசியை அடைந்தால் எத்தகைய முயற்சியும் செய்ய வேண்டாமலே, நீண்ட உறக்கத்தில் அழுந்தியே, மிக எளிதில் அடையலாம். புவனங்களைப் படைக்கும் புவனாதிபதிகளெல்லாம்கூட நமக்குப் பணிவிடைகள் புரிவர் எனக் காசிக் கலம்பகம் கட்டுரைக்கின்றது.

"முயலா மலேதவம் முத்தித் திருவை முயங்கநல்கும்
கயலார் பெருந்தடங் கண்ணிபங் கார்அருட் காசியிலே
செயலாவ தொன்றில்லை வாளா நெடுந்துயில் செய்யும்! உங்கள்
பயலாக வேபணி செய்வார் புவனம் படைப்பவரே"

## சிவமாய்ச் செலும் சிறு செந்துக்கள் :

காசியிலே சென்று சில்லாண்டுகள் இருந்து இறப்பதனால், சிற்றுயிர்கள் எல்லாம்கூட மிக எளிதில் வீடுபேறு எய்தி விடுகின்றன. அதனால் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு பெற்றுச் சிவலோகம் செல்லும் சிறுசெந்துக்கள், தம்மைப் போலச் சில்லாண்டுகளிலேயே உயர்வு எய்தப்பெறாமல்,

பல்லாண்டுகளாக ஒரே நிலையில் இழிந்து கிடக்கும் தேவர்களைப் பார்த்துத் தோள்கொட்டி நகைக்கின்றனவாம்.

"பல்லாண்டு தம்மைப் படைத்தஅத் தேவரைப்
பார்த்துப் பைம்பொன்
வில்லாண்ட தோள்கொட்டி எந்தையர்கோல விடம்பழுத்த
அல்லாண்ட கண்டத்தெம் ஆதிப்பிரான் அவிமுத்தத்திலே
சில்லாண் டிருந்து சிவமாய்ச் செலும்சிறு செந்துக்களே"

## உடற்பாரம் ஓம்பும் கேவலம் :

வீடுபேறு அடைய விரும்புபவர்கள் உடலை வெறுத்துப் புறக்கணித்து, அதன் சுமையைக் கழிக்கவே விரும்புவர். "செடியார் உடலைச் சிதையாதது எற்றுக்கு எங்கள் சிவலோகா" எனவும், "தினைத்துணையேனும் பொறேன் துயர் ஆக்கையின் திண்வலையே" எனவும் மணிவாசகர் அரற்றுதல் காணலாம். "பிறப்பறுக்க லுற்றார்க்கு உடம்பு மிகை" என்பது திருக்குறள். ஆனால் இதற்கு மாறாக, முத்தி எய்த விரும்புபவர்கள் தமது உடற்சுமையை மிகவும் கருத்தாகப் போற்றிக்கொள்ளும் விந்தையையும் நாம் காண்கின்றோம். காசிக்குச் சென்று இறத்தலால் முத்தியைப் பெற விரும்புபவர்கள், தாம் அங்குச் செல்லுந் துணையும், தமது முடைத் தலையையும் எலும்புகளையும் சாம்பலையும் காசியிற் கங்கையிற் சேர்த்தற்பொருட்டு, உடற் சுமையை வெறுமல் மிகவும் விழிப்போடு ஓம்பிக்கொள்ளுவர். காசி விசுவநாதர்மீது செய்யும் பக்திக்கு, இங்ஙனம் உடற்சுமையைத் தாங்கிப் பொறுத்துக்கொள்ளும் கேவலம் (இழிவு, முத்தி)தான் இவர்களுக்குப் பலனாகக் கிடைத்ததுபோலும்! இஃது என்ன வியப்பு?

"முத்திக்கு வேட்டவர் மோட்டுடற் பாரம், முடைத்தலையோடு
அத்திக்கும் சாம்பற்கும் ஓம்பினரால் ;
இவையன்றி அப்பால்
சித்திப்பது மற்றிலை போலும்! காசிச் சிவபெருமான்
பத்திக்குக் கேவலமே பலமாகப் பலித்ததுவே

## விசுவநாதர் பெருந்தகைமை :

விசுவநாதர் பெரிதும் சிக்கனம் மிக்கவர். அளவில்லாத கோடிக்கணக்கான பிள்ளைகளைப் பெற்றெடுத்துள்ள தமது மனைவியாகிய விசாலாட்சியின்பால் குடும்பம் நடத்துவதற்காக இரண்டு நாழியளவு நெல் மட்டுமே கொடுத்து, அது கொண்டு, 'முப்பத்திரண்டு அறங்களையும் செய்க' என்று கட்டளை யிட்டவர் அவர்! ஆனால் அத்தகைய கடுஞ் சிக்கனக்காரர் ஆகிய விசுவநாதர், கொள்ளை யிடும்படி பலருக்கும் முத்திச் சரக்கறை முழுவதையுமே திறந்து கொடுத்து விடுகின்ற பெருவள்ளலாகக் காசியிற் பிறங்குகின்றார்!

> "கொள்ளையிடப் பலர்க்கும் முத்திச் சரக்கறையைத்
> திறந்துகொடுத்து, அனந்த கோடிப்
> பிள்ளைகள்பெற் றுடையபெரு மனைக்கிழத்திக்கே
> குடும்பம் பேணுக என்று
> உள்ளபடி இருநாழி கொடுத்து, அதில் எண்ணான்கு
> அறமும் ஓம்புக என்றார்!
> அள்ளல்வயற் காசி ஆண்டகையார்
> பெருந்தகைமை அழகி தாமே!"

## முடிவுரை :

இங்ஙனம் குமரகுருபரர் போன்ற சான்றோர்களெல்லாம் புகழ்ந்து போற்றும் காசிவிசுவநாதர் திருவடிகளைப் பணிந்து வணங்கி, நாமும் ஈடேறி உய்ய முயலுவோமாக!

# "சைவத்தின் தொன்மையும் சமரசமும்"

வித்துவான் மா. நடராசன், M.A., B.O.L., விரிவுரையாளர்,
பழனியாண்டவர் கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரி,
பழனி.

உலகில் வாழும் உயிரினங்கள் பல. அவை யாவும் இன்பத்தையே விழைகின்றன. மக்களல்லாத உயிரினங்கள் உண்பதும் இனத்தைப் பெருக்குவதுமே தொழிலாகக் கொண்டு தாம் பெறும் இன்பத்தை வளர்க்கவும், ஏனைய துன்பத்தைத் தவிர்க்கவும் வழியறியாது ஒழிகின்றன. ஆனால் மக்கள் இனம் மட்டும் தனது பகுத்தறிவு கொண்டு தான் பெறும் இன்பத்தை வளர்க்கவும் ஏனைய துன்பத்தைத் தவிர்க்கவும் வழி வகுத்துக் கொள்ளுகிறது. அவ்வாறு வகுத்துக் கொள்ளும் வழி அல்லது நெறியாது? அதுவே அறநெறி அல்லது சமய நெறியாகும். சமயம்எனும் சொல்லுக்குப் பலர் பலபொருள்கள் கொள்ளினும், இன்ப நெறியாய இறைவனையடைய உயிர்கள் செல்லும் அற நெறியே 'சமயம்' என்பது இவண் முற்றும் பொருந்தும். வள்ளுவரும் 'அறத்தான் வருவதே இன்பம்' என்றும்,

'சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு' என்றும் கூறிப் போந்தார்.

எனவே இறையருளைப் பெறுதற்கு ஏதுவாய சமயத்தைத் துன்பநிலைக்குப் பயன் படுத்துவது சமயம் ஆகாது. சமயத்தின் பெயரால் போரிடுவோர் அறவழி நிற்போரல்லர். பிற உயிர்களிடத்துப் பற்றுக் கோடும் பிணிப்பும் கொண்டு ஒழுகுவதே சமயமாகும். இவ்வுண்மையைப் பின்வரும் செய்யுள் நமக்கு அறிவுறுத்துகின்றது.

.................................................. யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்

அருளும், அன்பும், அறனும், மூன்றும்
உருள்இணர்க் கடம்பின் ஒலி தாரோயே!

என்னும் செய்யுட் கருத்தைக் காண்க. [பரி-5: 78-81]

மக்கட்குச் சமயம் இன்றியமையாத தெனில், எச்சமயத்தைக் கைக்கொள்வதென்ற வினு எழும். உலகத்தில் பல்வேறு சமயங்கள் இருக்கின்றனவே, எச்சமயத்தை விடுப்பது எச்சமயத்தை ஏற்பது என்ற ஐயப்பாடுகள் வருவது இயல்பே. உலகில் உள்ள எல்லாச் சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயர்களால் புகழ்கின்றன. சமயங்களுள் ஏற்றத் தாழ்வு கருதுதல் ஏற்புடைத் தன்று. அதனுலன்றே மணிவாசகப் பெருமான்,

'தென்னுடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்றும்

திருமூலர்,

" ஒன்றது பேரூர் வழியாறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை யொத்தார்களே " என்றும்

கூறிப்போந்தனர். இக்கருத்தோடு பலசமயங்களையும் உற்றுணர்ந்தால் சமயத்தில் சமரச மணம் கமழுவதைக் காணலாம். சமரச நோக்கில்லாத சமயம், சமயமாகாது. சமரச நோக்குடைய சமயம் சாதி, மத, நாடு, இன மொழி வேறுபாடுகளைக் களைந்து எல்லோரும் ஓர் இனம் எல்லோரும் ஒரு குலம் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்கும். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்னும் திருமூலரது திருமந்திர உரையும் காண்க.

இன்று நாம் பங்கு கொண்டுள்ள 'சைவ சமயம்' சமரசத்திற்கு எத்துணை அளவு பொருத்தமாக உள்ளது என்பதை நோக்குதல் இன்றியமையாததாகிறது. சைவ சமயம் மிகவும் தொன்மை வாய்ந்தது. வரலாற்றுக் காலத்துக்கும் முற்பட்டது என்று கூறுவது மிகையாகாது. மக்கள் தங்கள் ஆற்றலுக்கு அப்பாற்பட்டதைப் 'பேராற்றல்' என்றும் 'இறை' என்றும் 'செம்பொருள்' என்றும் போற்றுவாரா

யினர். செம் பொருள் காட்சியினையே 'சிவம்' என்று அழைக்கலாயினர். 'சிவம்' என்ற சொல்லுக்கு 'இருளைப் போக்கி அருளைத் தருவது' என்பது பொருளாகும். காலப் போக்கில் சிவம் என்ற சொல்லின் ஈறாகிய 'அம்' விகுதி மறைந்து 'அன்' விகுதி ஏற்று 'சிவன்' எனவழங்கலாயிற்று. 'சிவன்' என்னும் சொல் 'சிவந்தவன்' செங்கதிர் உடையவன் என்று பொருள் பட நின்றது. இத்தகைய 'சிவன்' என்ற சொல்லும், 'சிவப்பயன்' என்பது போன்ற சொற்களும் நமது நாட்டிலும் உலகின் பல்வேறு நாடுகளிலும் வழங்கி வரலாயிற்று என்பதைக் கீழ்க் காணும் சான்றுகளால் அறியலாம். (பின்வரும் சான்றுகள் திரு. ந. சி. கந்தையா பிள்ளை அவர்களது, 'சிவன்' என்னும் நூலிலிருந்து எடுக்கப் பெற்றன.)

1. "பிலிப்பைன் தீவுகளில் சிலவற்றில் இன்றும் மக்கள் சிவனைச் சிவப்பயன் என வழங்குவர்"

2. "எகிப்திலே இலிபிய வனாந்தரத்தில் சிவன் என்னும் பாலை நிலப் பசுந்தரை ஒன்று உள்ளது. அமன், ரா, ஒசிறிஸ் என்னும் பெயர்கள் எகிப்தியரின் ஞாயிற்றுக் கடவுளைக் குறிப்பன. இக்கடவுளுக்கு வாகனம் இடபம். யூபிதர் என்னும் பெயரும் ஞாயிற்றுக்கடவுளைக் குறிப்பதாகும். கிரேக்கரது சியஸ் என்னும் கடவுட் பெயரும் 'சிவன்' என்பதன் திரிபே. சிவன் பாலை நிலப்பசுந்தரையில் இன்றும் 'அமன்' கடவுளின் கோயில்களில் வழிபாடுகள் காணப்படுகின்றன"

3. பாபிலோனரின் கடவுளுக்கு எல்சடை என்பதும் மற்றொரு பெயர். எல்சடை என்பது சிவபிரானைக் குறிக்க வழங்கும் சடையன் என்னும் பெயரை ஒத்திருக்கிறது.

4. "வட அமெரிக்காவிலே கொலறடோ என்னும் ஓர் ஆறு உள்ளது. இவ்வாறு நிலத்தை ஒரு மைல் ஆழம் வரையில் அரித்த ஆழத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது. இதன் பக்கத்தே மேற்பாகம் தட்டையாகக் காணப்படும் குன்றின் உச்சி சிவன் ஆலயம் என நீண்டகாலம் ஆங்குள்ள மக்கள் ஞாபகத்திலிருந்து வந்தது. இவ்விடத்தை ஒருவரும் ஏறிக் கண்டு பிடிக்க முடியாமல் இருந்தது. 1937ஆம் ஆண்டு

அமெரிக்கப் பழம் பொருள் ஆராய்ச்சியாளர் இவ்விடத்தைக் கண்டு பிடித்துத் தமது அறிக்கையை வெளியிட்டுள்ளார்கள். இச்சிவன் ஆலயத்தின் காலம் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்று சிலரும்; இஃது இன்னும் மிகப் பழமை உடையது என்று வேறு சிலரும் தமது கருத்தைத் தெரிவித்துள்ளார்கள். இதனால் வடஅமெரிக்காவில் பத்தாயிரம் ஆண்டுகளின் முன் சிவன் ஆலயமும், சிவன் வழிபாடும் இருந்தன வென்று நாம் துணிந்து கூறலாம்.

5. கிரேத்தாவில் சிவலிங்க வழிபாடு, சங்கு வாத்தியம் முதலியனவும் காணப்பட்டன.

6. பின்லாந்தில் வாழும் மக்கள் துரானிய வகுப்பைச் சேர்ந்தோர்—இம் மக்களின் காத்தற் கடவுள் சிவன்.

7. விவிலிய மறையின் பழைய ஏற்பாடு சிவன் என்னும் கடவுளைப் பற்றிக் கூறுகின்றது. ஞாயிற்றைக் குறிக்க ஆங்கில மொழியில் வழங்கும் 'சன்' என்னும் சொல் 'சிவன்' என்பதன் திரிபு எனக்கருத இட முண்டு.

8. அக்கேடிய மக்களின் ஏழு முக்கிய விண்மீன்களில் மூன்றுவது 'சிவன்' எனப்பட்டது.

9. யப்பானிய மக்களின் பழைய தெய்வங்களில் ஒன்றாகிய 'சிவோ' என்னும் பெயர் 'சிவன்' என்பதன் திரிபு ஆகலாம் என நாம் உய்த்துணரலாகும்.

10 இலிங்க வணக்கம் ஆசியாவில் தோன்றி அயல்நாடுகளில் பரவிற்று எனச் சிலர் நினைக்கிறார்கள். கிரேக்க நாட்டில் பேக்கஸ், தயோனிசன் வழிபாடுகள் தொடர்பில் சிவலிங்கங்கள் வழிபடப்பட்டன. கிரீஸில் பேக்கஸ் விழாவில் இலிங்கம் வீதிவலம் செய்யப்பட்டது. இலிங்கம் எனும் சொல் 'இலங்கு' என்னும் அடியாகப் பிறந்தது.

இம்முறையில் உலகெங்கும் போற்றப்படும் 'சிவன்' என்னும் செம்பொருளைச்'செம்மேனி எம்மா' னாகத் தமிழகம் போற்றுகிறது. சிலப்பதிகாரம் என்னும் காப்பியத்தில்

'பிறவாயாக்கைப் பெரியோன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'சிவ' வழிபாட்டு முறையினைச் சைவம் என்றும், சிவனை வழிபடும் மக்களைச் சைவர் என்றும்மக்கள் கூறுவாராயினர். இத்தகைய வழிபாட்டைப் பலரும் பலவழிகளில் கைக் கொண்டு ஒழுகலானார்கள். எவர் எம்முறையில் வழிபட்டாலும் இறைவன் ஒருவனே. இறைவனை வழிபட 'அன்பு நெறி' ஒன்றே போதும். அதனாலன்றோ திருமூலரும் 'அன்பே சிவம்' என்று கூறிப்போந்துள்ளார். முதன் முதலாகத் தோன்றியது சைவம். சைவமானது, பிற்காலத்தில் தோன்றிய சமணம், பௌத்தம் முதலிய சமயங்களோடு உறவு கொண்டு வடமொழிக் கலைகளோடு அளவளாவி ஏனையசமயங்களோடு கலந்து உலகில் அருள் நெறியாக வளர்ந்து வருகிறது. நம் நாட்டு மொழியாகிய தமிழ்மொழி தனித்து நின்று இயங்குவதோடு ஏனைய மொழிகளோடு உறவு கொண்டு விளங்குதல் போன்று, முழுமுதற் சமயமாகிய சைவசமயமும் தனித்தியங்குவதோடு எல்லாச்சமயங்களிலும் ஊடுருவித் திகழ்கின்றது. காரணம் எல்லோருக்கும் இறைவன் ஒருவனே ஆதலின். இக்கருத்தினை,

> "பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
> எல்லையறு பரம் பொருள் முன் இருந்தபடி இருப்பதுபோல்"

என்னும் அடிகளால் சுந்தரம் பிள்ளை அவர்கள் நமக்கு அறிவுறுத்துகின்றார். ஆதலால் எல்லாச்சமயங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு மிளிர்கின்றது சைவ சமயம் என்று கூறலாம். சைவசமயத்தில் வேற்றுமை உணர்வு காணமுடியாது. சைவ சமயவாதிகள் என்று சொல்லிக் கொள்ளும் சிலர்பால் வேற்றுமை உணர்வு இருக்கலாம். ஆனால் சைவ சமயக் கொள்கையில் வேற்றுமை உணர்வைக் காண இயலாது. இவ்வுண்மையை,

> 'ஓது சமயங்கள் பொருளுணரும் நூல்கள்
> ஒன்றோடொன்று ஒவ்வாமல் உளபலவும் இவற்றுள்

யாது சமயம் பொருள் நூல் யா திங்கென்னில்
இதுவாகும் அதுவல்ல எனும் பிணக்கதின்றி
நீதியினல் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நிற்பது யாதொரு சமயம் அதுசமயம் பொருணூல்
ஆதலினல் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே
அடங்கி யிடும் அவையிரண்டும் அரனடிக் கீழ்
அடங்கும்'

எனவரும் அருணந்தி சிவாச்சாரியார் திருவாக்கானுணர்க.

இவ்வாற்றல் சைவ சமயத்தின் நண்மை சமரசக் கொள்கையாகும். சமரசக் கொள்கை வளரத் தன் முனைப்பு அகலவேண்டும். எங்கு தன் முனைப்பு இல்லையோ அங்கு சைவ சமயம் பொலிவுறும். எந்நாட்டினராயினும் எம் மொழியினராயினும் எவ்வினத்தவராயினும் ஆகுக. ஆங் காங்கே தன் முனைப்பு இல்லையேல் சைவமணம் கமழுவதைக் காணலாம். சேக்கிழார் பெருமான்,

'எந்நிலையில் நின்றலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்றுள் மறவாமை பொருள்'

என்று கூறியுள்ளதும் இங்கு உன்னற்பாலது.

இம்முறையில் இறைவனை வழிபடுவதே ஏற்புடைத் தாகும். இறைவன் எங்கும் நீக்கமற நின்று நிலவுகிறுன் என்பதைப் பலர் பல துறைகளில் வெளிப்படுத்தியுள்ளார் கள். ஒவ்வொருவரும் தன் முனைப்பு அற்றுக் காணும் பொருள்களிலெல்லாம் இறைமையைக் காணவேண்டும் என் பதே அவர்களது கருத்தாகும். இறைவன் எங்கும் நிறைந் துள்ளான் என்ற கொள்கையைச் சமய குரவர்களில் ஒருவ ராகிய திருநாவுக்கரசர் மனமுருகிப் பாடியுள்ள

'இருநிலனய்த் தீயாகி நீருமாகி
இயமானனுயெறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிருகி
ஆகாசமாயட்ட மூர்த்தி ஆகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறவுருவுந் தம்முருவுந் தாமேயாகி
நெருநலையாய் இன்றகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே'

என்ற பாடலாலும், மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய

'வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே'

என்னும் அருள்வாக்காலும் அறியலாம்.

சைவ சமயக்கொள்கைக்கும், தமிழ்நாட்டு வைணவக் கொள்கைக்கும் அடிப்படைக் கருத்துக்கள் ஒருதன்மையவே என்பதை ஆழ்வார்கள் பாசுரங்களால் நன்கு அறியலாம். இறைவனைப்பற்றி நம்மாழ்வார் பாடிய பாடல்கள் பின் வருமாறு :

'யாவையும் எவருந்தானா யவரவர் சமயந்தோறும்
தோய்விலன் புலனைந்துக்கும் சொலப்படா
னுணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரினுள்ளா லாதுமோர் பற்றிலாத
பாவனை யதனைக்கூடி லவனையுங் கூடலாமே'

'ஒளிமணி வண்ணனென்கோ? வொருவனென்
றேத்த நின்ற
நளிர்மதிச் சடையனென்கோ? நான்முகக்
கடவுளென்கோ?
அளிமகிழ்ந்துலக மெல்லாம் படைத்தவை யேத்தநின்ற
களிமலர்த் துளவனெம்மான் கண்ணனை மாயனையே!'

இப்பாடல்களாலும் இறைவன் எங்கும் நிறைந்துள்ளான் என்பதும் வேறுபாடில்லாதான் என்பதும் நன்கு புலனாகின்றன அன்றோ?

இங்ஙனம் எங்கும் கலந்து யாவற்றிலும் நிறைந்திருக்கின்ற இறைமையாகிய செம்பொருளை வழிபடுதல் ஒவ்வொருவரின் தலையாய கடமையாகும். அத்தகைய இறைவனை வழிபடும் முறை யாது? ஏனைய உயிரினங்களில் இறைவன் நிறைந்திருத்தலின் உயிரினங்களைப் போற்றுதலே இறை

வனை வழிபடுவதாகும். உயிரினங்களைப் போற்றுதல்வேண்டும் என்பது பல்வேறுபட்ட சமயச் சான்றோரின் கொள்கையுமாகும். சைவம், சமணம், பௌத்தம், வைணவம் ஆகிய சமயத்துறைத் தலைவர்களும் பிற உயிர்களிடத்தில் அன்பு செலுத்தல்வேண்டும் என்றும், அதுவே இறைவனுக்கு விருப்பமாகுமென்றும் கூறிப்போந்துள்ளார்கள். அன்னார் பாடியருளிய பின்வரும் பாடல்கள் அவ்வுண்மையை மெய்ப்பிக்கின்றன.

'நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே' (அப்பர்)

'தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனு மின்ப மூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப் பிறந்துயர்ந்து போகுமே'
(சிந்தாமணி)

'வருந்தி வந்தோர் அரும்பசி களைந்தவர்
திருந்துமுகங் காட்டுமென் தெய்வக் கடிஞை'
(மணிமேகலை)

'வன்பெருவா னகமுய்ய வமரருய்ய
விண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத்
துன்பமிகு துயரகல அயர்வொன் றில்லாச்
சுகம்வளர அகமகிழும் தொண்டர் வாழ
அன்பொடுதென் திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்
அணியரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்
இசைந்துடனே யென்றுகொலோ இருக்குநாளே'
(குலசேகரர்)

'உன்னைப் போலப் பிறரை நேசி' (கிருஸ்து)

'உலகம் வாழவேண்டும் – உற்றாரும் மற்றாரும்
வாழவேண்டும்
அவர்கள் இடையில் தானும் வாழவேண்டும்'
(குர்–ஆன்)

'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே'
(தாயுமானவர்)

'அப்பாநான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்'
(இராமலிங்கர்)

இவ்விதமாகச் சமயப் பெரியார்கள் யாவரும் அன்பு நெறியையே கைக்கொண்டொழுகி அழியாப் பேரின்ப நிலை எய்தியுள்ளார்கள். அத்தகைய நன்னிலையுறுதலே ஒவ்வொரு உயிரினத்தின் தலையாய கடமையாகும். அதற்கு வழி அன்புநெறியைக் கைக்கொள்வதேயாம். சமயநெறி முழுதும் அன்பு நெறியாதல்வேண்டும். சமயத்தின் அடிப்படையிலேதான் அன்புநெறி வளர்தல் முடியும். அன்பு நெறி ஓங்க வேற்றுமை உணர்வு நீங்கவேண்டும். உன்னத நிலையில் ஒருகாலத்திலிருந்த சைவசமயம் முழுதும் மாறியுள்ளமைக்குக் காரணம் சமயத்துறையில் ஏற்றத்தாழ்வு உண்டானதேயாகும். சமயத்தில் ஏற்றத்தாழ்வு உணர்வு கொள்ளுதல் சைவசமயக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபாடுடையது. பிறப்பில் ஏற்றத்தாழ்வு எந்தக் காலத்திலும் எந்த அளவிலும் இருந்ததில்லை. இஃது தெய்வப்புலவர் திருவாக்காகிய

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'

என்னும் திருக்குறட்பாவினும் அறிக. வரலாற்றுக் காலத்துக்கு முன்னே வேதகாலத்திலோ, பழைய உபநிடதங்களிலோ இதிகாசங்களிலோ ஏற்றத்தாழ்வு இருந்ததாகத் தெரியவில்லை. தொல்காப்பியத்தில் சாதியில் ஏற்றத்தாழ்வு காணப்படவில்லை. சைவ வைணவப் பெரியார்களும் சாதியில் ஏற்றத்தாழ்வு கூறியுள்ளதாக இல்லை. ஆனால் எப்படியோ சாதியில் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டு நாட்டில் நுழைந்து சமயத்தைக் குலைக்க ஆரம்பித்துவிட்டது. அதனை ஆதரிப்போரும் மலிந்துவிட்டனர். இவ்வாறு இன்

லும் தொடர்ந்து நடைபெறுமானல் சமயத்தின் புனிதத் தன்மையே மறைந்துவிடும். உயிரினங்களும் இன்பநிலை எய்த வாய்ப்பில்லாது போய்விடும். இதனை உணர்ந்த சம யப் பெரியோர்கள் இடையில் நுழைந்த சாதியின் ஏற்றத் தாழ்வை ஒழிக்கப் பெரிதும் முயன்றுள்ளார்கள் என்பதைப் பின்வரும் பாடல்கள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

'சங்கநிதி பதுமநிதி இரண்டுந்தந்து
தரணியொடு வானளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்ல ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'
(அப்பர்)

'பாதியா யழுகியகால் கையரேனும்
பழிதொழிலும் இழிநிலையும்படைத்தாரேனும்
ஆதியாய் அரவணையாய் என்ப ராகில்
அவரன்றோ யாம்வணங்கும் அடிகளாவார்?
சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோரேனும்
சதுர்மறையால் வேள்வியால் தக்கோரேனும்
போதினன் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றுதார் புலையர்தாமே!'
(திருவரங்கக் கலம்பகம்)

'எத்துணையும் பேதமுறு தெவ்வுயிருந்
தம்முயிர்போல் எண்ணியுள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடமென நான் தெரிந்தேன்
அந்த வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என்
சிந்தைமிக விழைந்ததாலோ!' (இராமலிங்கர்)

இதுகாறும் கூறியவாற்றல் உயிரினங்கள் இன்பவாழ்வு எய் தச் சமயநெறி இன்றியமையாததென்றும், சமயங்கள் யாவும்

ஒரு கடவுளையே பல வழிகளில் போற்றுகின்றன என்றும், தொன்மைமிக்க தமிழர்கள் சிவமாகிய சைவநெறியைக் கைக்கொண்டு பெருஞ் சிறப்புற்று வந்தனர் என்றும், இடையிலே சிலர் சாதி ஏற்றத்தாழ்விற்கு அடிமைப்பட்டு உண்மை நிலையிழந்து இடருற்றுச் சாதிச்சகதியில் உழன்று வருகின்றனரென்றும், அதனின்றும் நீங்கி உய்யச் சமரச நோக்கம் வேண்டுமென்றும், அதற்கு ஒவ்வொருவரும் முயலுதல்வேண்டுமென்றும், அதற்கு அன்பு நெறியே சாலச் சிறந்ததென்றும் கண்டோம். ஆதலின் எல்லோரும் இன்புற்று வாழ அன்பு நெறியாம் சைவநெறியைக் கைக்கொண்டு ஒழுகுவோமாக.

'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

# சேக்கிழாரும் தேவாரமும்

–: புலவர்மணி, வித்துவான். தி. கி. சுந்தரமூர்த்தி :–

சென்றமாத இதழின் 240-ம் பக்கத் தொடர்ச்சி.

**இந்தளப் பண் :**

இனி சுந்தரமூர்த்தி சுவாமிகளை இறைவன் தடுத்தாட் கொண்டு, அவர் இசை கேட்கத் தொடங்கிய பகுதியில், சுந்தரர் முதன் முதலில் இறைவனைப் "பித்தா பிறை சூடி பெருமானே யருளாளா" எனத் தொடங்கிப் பாடியுள்ளார். அதனைச் சேக்கிழார் விளக்குமிடத்தில் இந்தளப் பண்ணையே கையாளுகின்றார்.

" கொத்தார் மலர்க் குழலாளொரு கூறாய் அடியவர்பால்
மெய்த்தாயினும் இனியானையவ் வியன்நாவலர்
பெருமான்
பித்தா பிறை சூடி எனப் பெரிதாந் திருப்பதிகம்
இத்தாரணி முதலாம் உலகெல்லாம் உ(ய்)ய எடுத்தார்"

“ முறையால் வருமருதத் துடன் மொழியிந்தள முதலிற்
குறையா நிலை மும்மைப்படி கூடுங் கிழ மையிருல்
நிறை பாணியின் இசை கோள்புணர் நீடும்புகழ்
வகையால்
இறையான் மகிழ் இசைபாடினன் எல்லாம் நிகர்
இல்லான்.”

இந்தளப் பண் பகற்பண் பத்தனுள் ஒன்ருகும். இது, காலை பத்து நாழிகை முதல் பன்னிரு நாழிகைக்குள் பாடத்தக்கது. சேக்கிழார் இவ்விடத்தில் இந்தளத்தை எடுத்தாள்கின்ற முறையை ஆராயின், நம்பிகளை இறைவன் ஆட்கொண்ட நேரமும் அதுவே என்பதனை அறியலாம்.

பண் இலக்கணம் 11 இல் மருதத்தின் பிரிவாக அமைந்த பண் இந்தளம் ஆகும். எனவே “மருதத்துடன் மொழி இந்தளம்” என்பதே பொருந்தும். சில பதிப்புக் களில் “மதுரத்துடன் மொழி இந்தளம்” எனக் குறிப்பிட் டுள்ளனர். அது பொருந்தா தென்பதை இவ்விசை இலக் கண வகையால் உணரலாம். வலிவு, மெலிவு, சமம் எனப் படும் மூவகைத் தானநிலை பொருந்தத் தாளவகை ஒன்ற இசையொடு பாடி ஆளானுர் சுந்தரர் என்பதைக் காண லாம்.

சேக்கிழார் பெருமான் திருவாக்கால் பல உண்மை களை அறியலாம். குறுந்தொகை, நேரிசை முதலியன அப்பர் திருப்பணி செய்யும் போது பாடப் பெற்றவை என்ப தைப் பெரிய புராணப் பாடல்கள் கொண்டு (நாவுக்கரசர் 169, 171) அறிய முடிகிறது.

திருத்தாண்டகங்கள் எல்லாம் இறைவன் திருமுன்பே பாடப் பெற்றவை எனக் கொள்ளலாம். இம்முறையில் சேக்கிழார் பல பண்முறைகளைக் கையாண்டு பாடி மகிழ்ந்த நிலைமையை ஓர்ந்தாயினும், தேவாரப்பண்களை நம்சமயமக்கள் முறையாகப் பாடி மகிழ்வார்களாக

# "மருள் நீக்கியார்"

திரு. பு. ர. சுவாமிநாதன் அவர்கள், M.A., L.T.,
அண்ணாமலைநகர், சிதம்பரம்

சைவ சமய ஆசாரியர் நால்வருள் ஒருவராய திரு நாவுக்கரசு சுவாமிகட்கு அவர் தாய் தகப்பனரால் அழைக்கப்பட்ட பெயர் மருள் நீக்கியார் என்பதாகும். சைவ சமயாசாரியர் நால்வரும் இறைவனை நேரே தம் அனுபவத்திற் கண்டு பேரின்பப் பெருவாழ் வெய்திய சிவஞானிகளாவர். இறைவனை அடையும் மார்க்கங்களில் ஒவ்வொன்று ஒவ்வொருவர் வாயிலாக உலகில் சிறப்பு வகையில் விளங்குவதாயிற்று. இப் பெரியார்களது சரித்திரங்களை உற்று நோக்கினுல் தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நான்கு மார்க்கங்களும் முறையே திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்திசுவாமிகள், மாணிக்கவாசகர் என்பவர்களது வாழ்க்கையால் விளக்கப்பெறும் உண்மை புலனுகும். மக்கள் தம் வாழ்க்கையில் எவ்வித வழிகளைக் கடைப்பிடித்து நடந்து முன்னேறலாம் என்பதைக் காட்டுவது போல இந்நெறிகள் அமைந்துள்ளன.

தாசமார்க்கம் ஆண்டான் அடிமை முறையைப் பின்பற்றுவதாகும்; சற்புத்திரமார்க்கம் தகப்பனும் பிள்ளையும் இருக்கும் வகையைச் சார்ந்தது; சகமார்க்கம் உற்ற நண்பர் இருவர் வாழும் நிலையை விளக்குவது; சன்மார்க்கம் இருகாதலரின் ஒருமித்த வாழ்க்கையை மேற்கொண்டுள்ளது. தனிப்பட்ட ஒருவனது வாழ்க்கையில் இவற்றில் ஏதாவதொன்றின் வழியிலேயே அவன் வாழ்க்கை நடத்த வேண்டிவரும். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகையிலும் தன் வாழ்க்கையை நடத்தவுங்கூடும். இவற்றில் திருநாவுக்கரசரது வாழ்வு ஆண்டான் அடிமை நிலையை விளங்கவைத்தது. அவரது ஆரம்ப வாழ்விலிருந்து இறுதியில் சிவஞானப்பேறுபெற்றவரை, கடினமான வாழ்க்கையாகவே அமைந்துள்ளதை நாம் அனைவரும்

கருதவேண்டியுள்ளது. திருஞானசம்பந்தர் போன்று முத்துச்சிவிகை பெற்று அதன் மேல் தலயாத்திரை புரிந்தாரில்லை, அல்லது சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆண்டவனை வேண்டிப் பெற்று அனுபவித்த கஸ்தூரி கமழ்சாந்தோ, அல்லது குண்டையூரில் பெற்ற நெல்மலைகளோ திருநாவுக்கரசருக்குக் கிடைக்கவில்லை. இவற்ருல் இவ்விருவரும் நாவுக்கரசரை விட உயர்ந்தோர் எனக் கூறுவதற்கில்லை. இந்நிலைகளில் ஒவ்வொரு நிலையும் அதனதன் தகுதியிலே சாலச்சிறப்புடைத்து. மருள் நீக்கியார் அவதாரத்தைக் கூறவரும் சேக்கிழார் பெருமான் கூறுவது என்ன ?

" திலகவதியார் பிறந்து சில முறையாண் டகன்றதற் பின், அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ, உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு கதிர் போல, மலரும் மருணீக்கியார் வந்தவதாரஞ் செய்தார் "

இச்செய்யுளால் நமக்குக் கிடைப்பன மூன்று கருத்துக்கள். அவை நாயனுர் அவதாரத்துக்கு முன் கலைத்துறை தழைத்திருக்கவில்லை, அருந்தவத்தோர் நெறி செம்மையாயில்லை, உலகில் இருள் எங்கும் நிறைந்திருந்தது — இவை மாற வேண்டிய நிலை ஏற்பட்டதை ஒழுங்கு செய்யவே ஆண்டவன் இப் பெரியாரை உலகில் அவதரிக்க வைத்தார் என்பதாகும்.

இவரது வாழ்க்கை வரலாற்றைச் சேக்கிழாரருளிச் செய்த பெரிய புராணத்தின் மூலம் உணர்ந்தபின், இவர் அருளிச் செய்த திருமுறைகளையுங்கற்றபின், மேற் கூறிய மூன்று கருத்துக்களையுங் கவனிப் போமாயின் நமக்குப் பல உண்மைகள் புலனுகும்.

பொதுவாக இவரது தேவாரப் பாடல்களை நான்கு, ஐந்து, ஆரும் திருமுறைகளாக வகுத்துள்ளனர். அதில் நான்காம் திருமுறையில் கவிச் சுவை நிரம்பிய பாசுரங்களும், ஐந்தாம் திருமுறையில் உபதேசம் நிரம்பிய பாடல்களும், ஆரும் திருமுறையில்இறைவனின் தன்மை, அருளும் வகை, வரலாறுகளும் உள்ளன வென்று ஆராயப்பட்டுள்ளன. இவற்ருல் கலைத்துறை தழைக்க இவரது பாடல்கள் உதவின. அக்காலத்தில் நாட்டில் சமண சமயம்

ஓங்கிச் சைவம் குன்றியிருந்தது—பல்லவ அரசனே சமண மதத்தைத் தழுவி அதற்கு வேண்டியஉதவிகள் புரிந்ததை நாவுக்கரசர் புராணம் கூறுவதை அக்காலத்திய கல் வெட்டுச் சான்றுகளாலும், பலரால் ஆராயப்பட்டு முடிவு செய்யப்பட்டுள்ள வரலாற்றுச் செய்திகளாலும் காண் கிறோம். நாயனார் சமணசமயத்தைச் சார்ந்து கலைவல்லு நராகி "தருமசேனர்" என்ற தகுதியோடு வாழ்ந்த பின் மீண்டும் சைவரான செய்தி நம்மனைவருக்கும் தெரிந்த தொன்றே — இச்சந்தர்ப்பத்தில் சைவத்திற்குத் தாயாக விளங்கி நம் சைவ உலகிற்கே ஒரு ஆசாரிய புருஷனைக் கிடைக்கச் செய்த திலகவதித்தாயை எண்ணாமலிருக்க முடியுமா? அவர் ஏன் உயிரை நீக்கிக்கொள்ளாமல் வாழ்ந்தார் என்பதைக் கூறவந்த சேக்கிழார்,

> "தம்பியார் உளராக வேண்டும் எனவைத்த தயா
> உம்பருலகணைய வுறுநிலை விலக்க உயிர்தாங்கி
> அம்பொன்மணி நூல் தாங்கா தனைத்துயிர்க்கும் அருள் தாங்கி
> இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதியாரிருந்தார்"

எனவும்,

> "தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழு தென்னை
> ஆண்டருளும் நீராகில் அடியேன் பின் வந்தவனை
> ஈண்டு வினைப்பரசமயக் குழி நின்றும் எடுத்தாள
> வேண்டும் எனப்பலமுறையும் விண்ணப்பம் செய்தனரால்"

என்பதிலிருந்து நன்கு உணரமுடிகின்றது.

அனைத்துயிர்க்கும் அருள் தாங்க விழைந்தார் தாய் திலகவதியம்மை. வாழ்ந்தார் நாயனார் நாவுக்கரசு — தழைத்தது கலை உலகம். ஓங்கியது அருந்தவத்தோர் நெறி. நீங்கியது உலகில்நிலவிய இருள். இன்றைய உலகைச்சற்று எண்ணிப் பார்ப்போமானால் எங்கும் இருள் சூழ்ந்துள் ளது, உலகத்தலைவர் என்போரெல்லாம் ஒளி எங்கு உள் ளது எனத் தேடித்தேடி அலைகின்றனர். நாயனார் போன் றதொரு ஒளி தோன்ற வில்லையாயின், என்ன நேரிடுமோ என அஞ்சத்தான் வேண்டியுள்ளது. தைமாதம் ஒன்று

சேர விருக்கும் எட்டுக்கிரகங்களைச் சாந்தப்படுத்த ஆங் காங்கே ஆண்டவன் சந்நிதிகளில் முறையீடுகள் செய்யப் பெறுகின்றன. அண்மையில் காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகள், கோளறு பதிகத்தைப் பாராயணம் செய்ய நம் அனைவருக்கும் வேண்டுகோள் விடுத்துள்ளனர். இப்பதிகம் திருஞானசம்பந்த சுவாமிகளால் பாடப்பெற்றது. இதைப் பாடுவதற்குக் காரணமாக இருந்த பெரியார் நம் நாவுக் கரசராவார். ஞானசம்பந்தப் பெருமான் சைவத்தாய் ஆகிய மங்கையர்க்கரசியார் வேண்டுகோட்கிணங்கிப் பாண்டி நாட்டிற்குப் புறப்படுந் தருவாயில், உடன் இருந்த நாவுக்கரசு சுவாமிகள் தாம் சமணரால் முன்னர் அவதியுற்ற அத்தனையையும் நினைத்து,

“அரசு அருளிச் செய்கின்றார் ‘பிள்ளாய் ! அந்த
அமண்கையர் வஞ்சனைக்கோர் அவதியில்லை
உரை செய்வதுளது உறுகோள் தானும்தீய
எழுந்தருள உடன் படுவதொண்ணு’ தென்னப்
பரசுவது நம் பெருமான் கழல்கள் என்றால்
பழுதணையா தெனப்பகர்ந்து பரமர் செய்ய
விரைசெய் மலர்த்தாள் போற்றிப்புகலி வேந்தர்
‘வேயுறு தோளியை’ எடுத்து விளம்பினாரே” —

“சிரபுரத்துப் பிள்ளையா ரருளிச் செய்த
திருப்பதி கங்கேட்ட தற்பின் திருந்து நாவுக்
கரசு மதற்குடன் பாடு செய்து தாமும்
அவர்முன்னே எழுந்தருள அமைந்தபோது
புரமெரித்தார் திருமகனார் அப்பா இந்தப்
புனல் நாட்டில் எழுந்தருளி இருப்பீர் என்று
கரகமலங் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப வாக்கின்
காவலருந் தொழுதரிதாங் கருத்தில் நேர்ந்தார்”

‘வேயுறு தோளிபங்கன்’ என்ற திருப்பாசுரத்தில்,

“தானுறு கோளும் நாளும் அடியாரைவந்து நலியாத வண்ணம் உரை செய்

ஆனசொன் மாலே ஓதும் அடியார்கள் வானில் அர சாள்வர் ஆணைநமதே" என்ற பின்னரே நாவுக்கரசரும் ஞானசம்பந்தப் பெருமானுக்குப் போகுமாறு ஆணைதந் தனர். ஆகவேபாண்டி நாட்டில் சைவசமயப் பயிர் தழைக்க நாவுக்கரசர் வழியனுப்பிய செய்தி உதவுகிறது.

இனி நாவுக்கரசர் நமக்கு அருளிய சில உண்மைகளை உணர முயற்சிப்போம். தாமே நடந்து காட்டி மக்களும் அவ்வழியைப் பின்பற்றி நற்கதியடைய முயற்சிக்க ஊக்குகின்றார். பல்லவ அரசன் தம்மை அழைத்தபோது

"நாமார்க்கும் குடியல் லோம் நமனை அஞ்சோம்"

என்ற அஞ்சாமை,

"உடையார் ஒருவர்தமர்நாம் அஞ்சுவதியா தொன்று மில்லைஅஞ்ச வருவது மில்லை" என்பதாலும் "மண் பாதலம் புக்குமால் கடல்மூடி மற்றேழுலகும் விண்பால் திசை கெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே" என்றும்

"வானந் துளங்கி லென்மண்கம்ப மாகிலென்
மால் வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறி லென்தண் கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலை நஞ்சுண்
டுனமொன் றில்லா ஒருவ னுக்காட்பட்ட உத்தமர்க்கே"

என்றும் திரவார்த்தைகளை நமக்களித்துள்ளது. சுலபமாக இறைவனை அடைய வழிகளிருப்பின் அதைக் கடைப் பிடித்து அதை எளிதாகச் செய்யலாமே எனக் கருதுங் காலம் இது. நாவுக்கரசர் கூறும் ஒரு வழியைச் சற்றுக் கவ னிப் போம்.

"அவன் தனை யான் பவன் எனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால், இவன் எனைப்பன்னாள் அழைப்பொழியான் எனச், சிவன் எனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனி எம்மான் எதிர்ப்படுமே" என எவ்வ ளவு அழகாகக் கூறுகின்றார். ஆண்டவன் நாமத்தைக் கூறியே அவனை அடைய முயற்சிப் போமாக– எப்படிவழி படுவது என்பதைக் கூறவந்த நாயனார்,

"வேட்களத் துறைவேதியன் எம்மிறை
ஆக்க ளேறுவர் ஆனஞ்சு மாடுவர்

பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றினுல்
காப்பர் நம்மைக் கறை மிடற்றண்ணலே ''
என வழி வகையுங் கூறுகிருர். தாம் சிவபூசை செய்ததை

'' சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன்னுமம் என் நாவில் மறந்தறியேன் ''

எனத் தமது முதற் பதிகத்திலேயே கூறுகின்ருர். எப்படி எல்லாம் ஆண்டவன் நமது செயல்களைக் கவனிக்கின்ருர் என்பதை நயமாகக் கூறுகின்ருர் நம்சுவாமிகள்.

'' தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற் றரற்றுகின் ருரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே ''

திருஎறும்பியூர்த் திருத்தாண்டகத்தில் ஆண்டவன் அருளும் திறத்தினை,

'' பன்னிய செந்தமிழறியேன் கவியேல் மாட்டேன்
எண்ணேடு பண் நிறைந்த கலைகளாய
தன்னையுந் தன் திறத்தறியாப் பொறியிலேனைத்
தன் திறமும் அறிவித்து நெறியுங் காட்டி
அன்னையையும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை ஆளாக் கொண்ட
தென் எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தைச்
செழுஞ் சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே ''

எனக் கூறுவது சிந்திக்கற் பாலது. ஆண்டவன் எங்ஙனம் அடியார்கள் பிழைகளைப் பொறுத்து ஆட்கொள்கின்ருர் என்பதை,

'' அத்தா உன் அடியேனை அன்பா லார்த்தாய்
அருள் நோக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்

எத்தனையும் அரியை நீ எளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி ஏன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை இருந்த வாறே''

என்ற பாசுரத்தின் மூலம் மனிதனது தாழ்ந்த நிலையிலும் கடவுள் செய்யும் கருணையின் உயர்ந்த தன்மையை விளக்குகின்றார்.

அடக்கமே உருவான அப்பர் பெருமான் வாழ்க்கையில் நடத்திக் காட்டிய ஒரு நிகழ்ச்சி நமக்கெல்லாம் ஒருபெரும் படிப்பினையாக அமைந்துள்ளது. யாராலும் காட்ட முடியாத இறைவனைச் சுட்டிக்காட்டி, அம்மையாரின் அமுதுண்ட ஞானசம்பந்தப் பிள்ளையார் தம் சிவிகையில் செல்கின்றார். திருப்பூந்துருத்தி நெருங்கியதும் கல்லினைத் தெப்பமாகக் கொண்டு கரையேறி "நாவுக்கரசர்" என்று ஆண்டவனால் அழைக்கப் பெற்ற பெருமானைத் தரிசிக்க விழைகின்றார். ஆனால் அப்பர் பெருமானே சம்பந்தப் பெருமான் சிவிகையினைத் தாங்கி வருகின்றார். இக் காட்சியை நம் சேக்கிழார் பெருமானின் திருவார்த்தை களினாலேயே காண்போம்.

"வந்தொருவர் அறியாமே மறைந்த வடிவொடும் புகலி
அந்தணனார் ஏறி எழுந்தருளி வரும் மணிமுத்தின்
சந்த மணிச் சிவிகையினைத் தாங்கு வாருடன்தாங்கி
சிந்தை களிப்புற வருவார் தமையாருந் தெளிந்திலரால்.

திருஞான மாமுனிவர் அரசிருந்த பூந்துருத்திக்
கருகாக எழுந்தருளி "எங்குற்றார் அப்பர்" என
உருகா நின்றும் "அடியேன் உம் அடிகள் தாங்கி வரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற்றேன்"

என்றார். சைவசமய ஆசார்யர்களுள் வயது முதிர்ந்த அப்பர் பெருமானின் அடக்கம், எந்நிலையிலிருந்த தென்பதை இந்நிகழ்ச்சி அறிவுறுத்துகின்றது.

கயிலையைக் காண வடநாட்டு யாத்திரையை மேற்கொண்டு சென்றபோது மிகவுங் கடினமான நிலைகளை அடைகின்றார்—தசைப்பொதிகள் கழன்று எலும்பும் தேய்ந்து போன போது, ஆண்டவனே ஒரு குளக்கரையில் இருந்து கயிலையாத்திரையின் கடுமையை உணர்த்திய போது,அப்பர் பெருமானின் ஆண்மையுடன் கூடிய பதில் இதுவாகும்.

"ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டலல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன் எனமறுத்தார்"

நாவுக்கரசரது பாடல்களில்எப்படிஎல்லாம் ஆண்டவனைத் தான் உணர்ந்து அனுபவித்துள்ளார் என்பது நன்கு புலனாகின்றது.

"என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும் முன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன் அடியான் என்றறிதலும்
தன்னை நானும் பிரான் என்றறிந்தெனே"

உண்மையான உள்ளத்தோடு வழிபாடு நடைபெறல் வேண்டும்; இன்றேல் இறைவன் கூசுகின்றான் என்ற கருத்தை,

"நெக்குநெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்குநிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்கு நிற்பன் அவர் தமைநாணியே"

"கோடி தீர்த்தம் கலந்து குளித்தவை
ஆடினாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடும்நீரினை ஓட்டைக் குடத்தட்டி
முடிவைத் திட்ட மூர்க்கனோ டொக்குமே"

என்ற பாடல்களால் விளக்குகின்றார்.

ஒருகுறிக் கோளோடு நம் வாழ்க்கை அமைய வேண்டும் என்பதை,

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்புவந்து

கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோ ளிலாது
கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக் கொண்டீச் சுரத்
துளானே''

என்பதனால் வலியுறுத்துகின்றார்.

எங்குபார்த்தாலும் மக்கட்குத் தொண்டு புரிதல் வேண்டும் எனப் பேசப்படுவதைப் பார்க்கின்றோம். இதற்கு வித்திட்ட பெருமை நம் அப்பர் பெருமானையே சேரும். "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அரிய வார்த்தைகள் அடங்கிய சொற்றொடர் "சொற் குறுதிக்கு அப்பர்எனச் சொல்" என்ற பெரியாரது சிறந்த இனிய உறுதி வார்த்தைகளல்லவா!

இறுதியாக இவர் திருநாமமே ஒரு பஞ்சாட்சரமாக அமைந்துள்ளது. ஒற்றெழுத்து நீங்கலாக "நாவுக்கரசு" என்ற பக்த பஞ்சாட்சர மாக அமைகின்றது அவர் திரு நாமம். இதனைச் செபித்தே பெரிய பதவிகளை அடைந்த பெரியார் பலருண்டு. அறுபத்து மூவருள் ஒருவராய அப்பூதி அடிகள் பெற்ற பேற்றினை 'நால்வர் நான்மணிமாலை' யில் சிவப்பிரகாச சுவாமிகள் கூறும் வார்த்தைகளைக் கொண்டு காண்போம்.

"உற்றானலன் தவம்; தீயில் நின்றானலன்; ஊண்புனலா
அற்றானலன் நுகர்வும்; திருநாவுக்கரசு எனும் ஓர்
சொல்தான் எழுதியுங் கூறியுமே என்றும் துன்பில்பதம்
பெற்றான் ஒரு நம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே"

ஆக நாமும் நாவுக்கரசர் வாழ்க்கையில் கண்டபல உண்மைகளைச் சிந்தித்து அஞ்சாமை, அடக்க முடைமை, ஆண்மை, உறுதி, ஊக்கம், தொண்டு மனப்பான்மை ஆகிய நலன்களைப் பெற முயற்சிப்போமாக!

"மணியன மாமறைக்காட்டு மருந்தினை வண்மொழியால்
திணியன நீள்கதவந் திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன கன்மிதப் பித்தன சைவப் பெரு நெறிக்கே
அணியன நாவுக்கரையர் பிரான் தன் அருந்தமிழே"

# மதிப்புரை

கந்தன் மலர்; திருவல்லிக்கேணி ஸ்ரீ குமார தருவமர் இருக்கைத் திருப்புகழ்ச் சங்கவெளியீடு. திருப்புகழ் அரசு பிரும்ம ஸ்ரீ ஈ வே. வேங்கடராவ் அவர்களின் 80ஆம் ஆண்டு நிறைவினை ஒட்டி, அவர்தம் புதல்வர் திரு. ஈ. வே. வேங்கட சுப்பிரமணியம் அவர்களால் தொகுத்துப் பதிப்பிக்கப் பட்டது. கந்தப் பெருமானைப் பற்றிப் பேரறிஞர்கள் பலரின் அரிய கட்டுரைகள் இதில் அடங்கியுள்ளன. பதிப்பாளர் இயற்றிச் சேர்த்துள்ள "கந்தபிரான் அடியார் வாழ்த்து" முதலிய கவிதைகள் நூலுக்குச் சிறப்பை விளை விக்கின்றன. ஸ்ரீலஸ்ரீ சிருங்கேரி சங்கராசார்ய சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சங்கராசார்ய சுவாமி கள், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமி கள் ஆகிய சான்றோர் பெருமக்கள் இந்நூலுக்கு ஆசியுரை வழங்கியுள்ளனர். கந்தனடியார்கள் அனைவரும் படித் தின்புற வேண்டிய மிகச் சிறந்த பக்திப் பனுவல்! விலை ரூபா மூன்று. கிடைக்குமிடம்: சைவசித்தாந்த நூற்பதிப் புக் கழகம், மண்ணடி, சென்னை–1; ஷை திருப்புகழ்ச் சங்கம், 15 தணிகாசலம் பிள்ளை தெரு, திருவல்லிக்கேணி, சென்னை–5.

நயினைநாகேஸ்வரி அம்பாள் கோவில் வரலாறு: இலங் கையின் புராதன சைவாலயங்கள் பலவற்றின் வரலாறு களையும், தமிழ்ப் புலவர்கள் சைவப் பெரியார்கள் ஆகியோரின் சரித்திரங்களையும் பிறவற்றையும் எழுதி வெளியிட்டு உதவுதலில் மிகவும் ஆர்வம் கொண்டுழைத்து வரும் பேரறிஞர் திரு. முதலியார் குல சபாநாதன் அவர் களால் எழுதி வெளியிடப் பட்டுள்ள இந்நூலானது, இலங்கை நயினை தீவிலுள்ள நாகேஸ்வரி அம்பாள் கோயில் வரலாற்றை மிகச் சிறந்த முறையில் விளக்கு கின்றது. நூலின் முகப்பிலும் இடையிலும் அழகிய சில படங்கள் அமைந்து, நூலின் கவர்ச்சியினை மிகுதிப்படுத்து கின்றன. கோயிலைப் பற்றிய கவிதைகள் பலவும் நூலிற் சேர்க்கப் பெற்றுள்ளன. எளிய இனிய சிறந்த நடையில் எழுதப் பெற்று, மிகவும் கவர்ச்சியான முறையில் திருத்தமுற நன்கினிது அச்சிடப் பெற்றுள்ளது. விலை ரூபா ஒன்று. கிடைக்குமிடங்கள்; பூபால சிங்கம் புத்தக சாலை, 21 பெரிய கடைவீதி, யாழ்ப்பாணம்; லக்ஷ்மிபவன், 97 நொறிஸ் வீதி, கொழும்பு.

Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 35—No. 9

# சமாஜத்தின் புதிய அலுவலர்கள்

நமது சமாஜத்தின் செயலாளராக இருந்து வந்த திரு. G. கலியாணம் பிள்ளை, M. A. அவர்கள் தமது அரசாங்க அலுவலினின்று ஓய்வு பெற்றுக் கொண்டு, தம் ஊருக்குச் செல்ல நேர்ந்ததனால், நம் சைவப்பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் புதல்வரும், சென்னைப் பின்னி கம்பெனியில் உயர் அலுவலராக இருந்து வருபவரும் ஆகிய திரு. ச. சிவகுமார் M. A. அவர்கள், சமாஜத்திற்குச் செயலாளராக இருக்குமாறு செயற்குழுவினரால் வேண்டிக் கொள்ளப் பெற்று, ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.

இங்ஙனமே நம் "சித்தாந்தம்" இதழின் ஆசிரியராகப் பல ஆண்டுகள் பணியாற்றி வந்த திரு. புலவர் ந. ரா. முருகவேள், M. A., M. O. L அவர்கள், சென்னை அரசாங்க அறநிலைய ஆட்சித்துறையின் சார்பில் நடைபெற்று வரும் ' திருக்கோயில்" இதழின் ஆசிரியராக நியமிக்கப் பெற்றிருப்பதனால், அவர்களுக்குப் பதிலாக நமது சமாஜத்தின் பழம் பெருந் தலைவர்களுள் ஒருவரும், சுந்தரர் தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா முதலியவற்றைச் சிறந்த குறிப்புரைகளுடன் சமாஜச் சார்பில் வெளியிட்டு உதவியவரும், சமாஜக் கட்டிடத்துக்காக ரூபா 20,000 வழங்கிய பெருந்தகையாளரும் ஆகிய திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், M. A., அவர்கள் "சித்தாந்தம்" ஆசிரியராகச் செயற் குழுவினரால் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார் என்பதனை மகிழ்ச்சி யுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by A. Somasundaram Chettiar, M.A., and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.